22nd April 1960]

SRI S. RANGANATHA MUDALIAR : May I know, Sir, the average annual amount realised by the Government by the sale of chanks ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : I would like to have a separate question, Sir.

SRI A. GOVINDASAMY : சங்கு வளையல்கள் செய்யக்கூடிய தொழிற்சாலையை தமிழ் நாட்டில் அமைத்து இங்கே அத்தொழிற்சாலை உற்பத்தி செய்யக்கூடிய வளையல்களை ஏன் வங்காளத்திற்கு அனுப்பக் கூடாது ? அதற்கான நிபுணர்களை வங்காளத்திலிருந்து இங்கே அனுப்ப வங்காளத்தில் உள்ளவர்கள் மறுத்தார்கள் என்பது உண்மையா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : சங்கு வளையல்களை இங்கேயே தயாரிக்க வேண்டுமென்று உத்தேசம் இந்த அரசாங்கத்திற்கு இருந்தது. ஆனால் இங்கே அதற்கான தொழிற்சாலையை அமைக்க வேண்டுமென்றால், அதற்கான நிபுணர்கள் இங்கே இல்லை. அதற்கான நிபுணர்களை வங்காளத்திலிருந்து இங்கே அனுப்ப வங்காளத்திலுள்ளவர்கள் மறுத்து விட்டனர். எனவே அந்தத் தொழில் இங்கே வரமுடியாமல் போய்விட்டது.

SRI K. ANBAZHAGAN : சங்குகளும் முத்துச்சிப்பிகளும் தூத்துக்குடியில் மிகுதியாகக் கிடைக்கும் இடத்தில் அப்போதுகூட அவை திருட்டுப் போகின்றன என்று புகார் செய்யப்படுவது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : சமீபத்தில்கூட இம்மாதிரி திருட்டுப்போனபோது திருடியவர்கள் பிடிக்கப்பட்டிருப்பதாக அரசாங்கத்திற்குத் தகவல் கிடைத்திருக்கிறது. இந்த விஷயத்தில் தகுந்த முறையில் கவனம் செலுத்தி, எந்தெந்த இடங்களில் காவல் வைக்க வேண்டுமோ அந்தந்த இடங்களில் காவல்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

*New Railway lines*

*794 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 20-3-1960-ல் மத்திய சர்க்கார் ரயில்வே மந்திரியின் தலைமையில் மாநில சர்க்கார்களின் முதலமைச்சர்களின் கூட்டம் நடைபெற்றதா ?

(ஆ) அதில் நம் மாநிலத்தின் ரயில்வேக்களின் விஸ்தரிப்பு பற்றி பேசப்பட்டதா ?

(இ) அப்படியாயின் அதன் விபரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) The construction of new railway liens in the country as a whole was discussed in a general manner and there will be a further detailed discussion in the matter.

SRI S. M. ANNAMALAI : நமது மாநிலத்தில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலோ இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலோ ஒரு ரயில் பாதை கூட போடவில்லை. ஓர் ரயில் பாதையும் விஸ்தரிக்கப்படவில்லை. எனவே இந்த மாநிலத்தில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது புதிய ரயில் பாதைகள் போட வேண்டுமென்று மத்திய அரசாங்கத்திடம் ராஜ்ய அரசாங்கம் வற்புறுத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த மாநிலத்தில் அந்தக் கால கட்டத்தில் ஒரு ரயில் பாதையும் போடவில்லை என்று சொல்வது சரியல்ல. காரைக்குடி–அறந்தாங்கி லைன் போட்டிருக்கிறார்கள். மேலும், எடுக்கப்பட்ட சில லைன்கள் மறுபடியும் போடப்பட்டிருக்கின்றன. மதுரை-போடிநாயக்கனூர் லைனில் மறுபடியும் ரயில்கள் போகின்றன.

ஆனால் புதிதாக லைன்கள் போடுவதற்கென ஒதுக்கப்பட்டுள்ள பணம் குறைவாக இருப்பதாக ரெயில்வே மந்திரி சபையினர் கூறுகிறார்கள். "அதை வைத்துக்கொண்டு எங்கெங்கு லைன்கள் அவசியமோ அங்கங்கு லைன்கள் போடுகிறோம்" என்று அவர்கள் சொல்கிறார்கள். இந்த ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் இங்கே சில லைன்கள் போட வேண்டு மென்று இந்த ராஜ்ய அரசாங்கம் மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்தி யிருக்கிறது. அது இனிமேல் தான் முடிவு செய்யப்படும்.

Sri S. SOWDI SUNDARA BHARATHI: விருதுநகரிலிருந்து மானாமதுரைக்கு அருப்புக்கோட்டை வழியாக ஒரு ரயில் பாதையை, அந்தப் பகுதியின் பாதுகாப்பிற்காகவும் வளர்ச்சிக்காகவும் போட வேண்டியது அவசியம் என்பது சமீபத்தில் நடந்த கான்பெரென்ஸில் வற்புறுத்தப்பட்டதா? அப்படியானால் அந்த கான்பெரென்ஸில் அதன் பேரில் என்ன முடிவு நிறைவேற்றப்பட்டது?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த ராஜ்யத்தில் 13 ரெயில்வே லைன்கள் போட வேண்டுமென்று இந்த அரசாங்கத்தார் மத்திய அரசாங்கத்தாரிடம் சிபாரிசு செய்தார்கள். ஆனால் இப்போது அந்த சிபாரிசுகளைக் குறைத்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்த ராஜ்யத்தில் 6 லைன்கள் போட வேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிறோம். அந்த சிபாரிசுகளில் அருப்புக் கோட்டை வழியாகச் செல்லக்கூடிய விருதுநகர்-மானாமதுரை லைனுக்கு மூன்றாவது ப்ரயாரிடி கொடுக்கப்பட்டிருக்கிறது.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR: தாம்பரத்திலிருந்து செங்கற்பட்டுக்கும், செங்கற்பட்டிலிருந்து விழுப்புரத்திற்கும் மின்சார ரெயில் பாதை போட என்ன திட்டம் போட்டிருக்கிறார்கள்? அதாவது அதற்கான திட்டம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் ஆரம்பிக்கப் படுமா, அல்லது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது எடுத்துக் கொள்ளப்படுமா?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: இது சம்பந்தமாக பூர்வாங்க வேலைகள் கவனிக்கப்பட்டு வருகின்றன. இது சம்பந்தமாக ஏதோ டெக்னிகல் கஷ்டங்கள் இருப்பதாகவும் அதனால்தான் தாமதம் ஏற்படுவதாகவும் சொல்கிறார்கள். இருந்தாலும், தாம்பரத்திலிருந்து செங்கற்பட்டு வரையிலும் எலெக்ட்ரிபிகேஷன் செய்வது, செங்கற்பட்டிலிருந்து விழுப்புரம் வரை எலெக்ட்ரிபிகேஷன் செய்வது இந்தத் திட்டம் நிறை வேற்றப்படும்.

Sri N. R. THIAGARAJAN: இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, திண்டுக்கல்லிலிருந்து கூடலூருக்கு தேனி வழியாக செல்லக்கூடிய ரெயில் பாதை போட வேண்டுமென்ற சிபாரிசு அஸெம்பிளியில் சமர்ப்பிக்கப் பட்டதே; இப்போது சிபாரிசு செய்யப்பட்டுள்ள லைன்களில் இந்த லைன் எந்த இடத்தைப் பெற்றிருக்கிறது?

The Hon Sri M. BHAKTAVATSALAM: இந்த லைனுக்கு முதலிடம் கொடுக்கப்படவில்லை. ஆனால் முன்பு சிபாரிசு செய்யப்பட்ட 13 லைன்களில் இது இடம் பெற்றிருந்தது. இப்போது 6 லைன்களைத்தான் வற்புறுத்தியிருக்கிறோம். அவைகளில் இது இல்லை. இதைப் போடவேண்டி யது அவ்வளவு அவசர அவசியம் இல்லை என்பதால் இது இப்போது செய்துள்ள சிபாரிசுகளில் சேர்க்கப்படவில்லை.

Sri M. R. KANDASWAMI MUDALIYAR: சேலத்திலிருந்து பங்களூருக்கு தர்மபுரி வழியாகச் செல்லக்கூடிய ரெயில் பாதை முன்பு இருந்தது. அதை பிரிட்டிஷார் ஆட்சி இருந்தபோது யுத்த காலத்தில் அந்த அரசாங்கத்தார் எடுத்து விட்டார்கள். அந்தப் பாதையை மீண்டும் போட வேண்டுமென்று பல முறை வற்புறுத்தப்பட்டிருக்கிறது. அந்தப் பாதையை மீண்டும் போட வேண்டுமென்று மத்திய அரசாங்கத்திற்கு

22nd April 1960]

இந்த அரசாங்கம் சொல்லியிருக்கிறதா ? அப்படிச் சொல்லியிருந்தால் அது எப்போது போடப்படும் ? அது எந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக் கொள்ளப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த சேலம்-பெங்களூர் லைன் இரண்டாவது திட்டத்திலேயே போடப்படும் என்று எதிர் பார்க்கப்பட்டது. இப்போது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்க வேண்டும் என்று இந்த அரசாங்கம் சிபாரிசு செய்திருக்கும் 6 லைன்களில் இந்த சேலம்-பெங்களூர் லைனுக்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI P. U. SHANMUGAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் புதிய லைன்களே எடுக்கப்படமாட்டாது என்று பேசப்படுகிறதே அது உண்மைதானா ? தென்னகத்திற்குப் புதிய லைன்கள் கொடுப்பதற்கு மத்திய அரசாங்கம் ஏதேனும் சாக்குகள் சொல்லி ஏமாற்றி வருகிறது என்று சொல்லப்படுவதும் உண்மைதானா ? தொழில் எங்கு வளர்ந்திருக்கிறதோ அங்குதான் ரயில் பாதை போடப்படுகிறது என்றும், ரயில் பாதை எங்கு இருக்கிறதோ அங்கு தொழில் ஆரம்பிக்கப்படுகிறது என்றும் ஒன்றுக் கொன்று முரணான பதில்களை மத்திய அரசாங்கத்தில் சொல்கிறார்களே, அதைப்பற்றி சென்னை அரசாங்கம் என்ன கருதுகிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பல கருத்துக்கள் தெரிவிக்கப்படலாம். இதைப்பற்றியெல்லாம் நாம் இங்கே விமரிசனம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. இந்த அரசாங்கத்தைப் பொறுத்த வரையில், 6 லைன்கள் முக்கியமாக எடுத்துக்கொள்ளப்படவேண்டுமென்றும், அதிலே நாங்கள் அளித்திருக்கும் "ப்ரையாரிடி"-படி சில லைன்களாவது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எடுத்துக்கொள்ளப்பட வேண்டுமென்று வற்புறுத்தி வந்திருக்கிறோம். அதோடு, இந்த மன்றத்தில் நான் ஒரு முறை தெரிவித்தபடி, தென் மண்டல சபையிலே கூட இது விவாதிக்கப்பட்டது. மேற்கொண்டும் இது மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்தப்படும்.

SRI M. RAMACHANDRA REDDIAR : முக்கியமான இந்த ஆறு லைன்களில், செங்கற்பட்டு-சின்ன சேலம் ரயில் பாதை வந்தவாசி வழியாகப் போகவேண்டுமென்று நெடு நாட்களாக வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. அதுவும் இதில் சேர்க்கப்பட்டிருக்கும் என்று நம்புகிறேன். அப்படிச் சேர்க்கப்படவில்லையென்றால், அதைச் சேர்த்துவிடும்படியாகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சின்ன சேலத்திலிருந்து செங்கற்பட்டு வரையில் போகும் லைன் ரொம்ப முக்கியமானது ; ஏற்கெனவே ரயில்வே லைன் இல்லாத இடம், அவசியம் போடவேண்டியது தான். முன்பே மத்திய அரசாங்கமும் அதன் அவசியத்தை உணர்ந்திருக்கிறது. ஆறு லைன்களிலே அதற்கு நான்காவது ஸ்தானம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

SRI T. KARIA GOUNDER : ஆறு ரயில் பாதைகள் சேர்க்கப்பட வேண்டுமென்று தெரிவித்திருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்களே. அதில், திருப்பத்தூர்-கிருஷ்ணகிரி லைன் சேர்க்கப்பட்டிருக்கிறதா ? வேலூர்-காஞ்சீபுரம் லைன் போடுவதற்காக சர்வே செய்யப்பட்டதே, அது எந்த நிலையில் இருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வேலூர்-காஞ்சீபுரம் லைன் இப்பொழுது கைவிடப்பட்டிருக்கிறது. இப்பொழுது அதற்கு அவசியம் இல்லை என்று அரசாங்கம் கருதுகிறது. திருப்பத்தூர்-கிருஷ்ணகிரி லைனுக்குப் பதிலாகத்தான், சேலம்-பங்களூர் லைனை "த்ரூ" லைனாகப் போட வேண்டுமென்று சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. அதை மத்திய அரசாங்கமும் ஏற்றுக்கொண்டிருக்கிறது. எப்பொழுது எடுத்துக்கொள்வார்கள் என்பது தான் இப்பொழுது நாம் பார்க்கவேண்டிய விஷயம்.

Sri M. C. MUTHUKUMARASWAMY : அனேக கிராமங்களின் வழியாக பஸ்கள் ஓடிக்கொண்டிருப்பதால் ரயிலில் பிரயாணம் செய்வது குறைந்து, ரயில் வருமானமும் குறைந்து நஷ்டம் ஏற்படுகிறது என்ற புகார் இருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? புதிய ரயில் பாதைகளைத் திறப்பதன் காரணமாக அதனால் ரயில்வேயிக்கு நஷ்டம் ஏற்படும் அல்லவா ? அதற்கு அரசாங்கம் என்ன பதில் சொல்லியிருக்கிறது ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினருடைய இந்தக் கருத்தை யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். நல்ல ரோடும் வேண்டும் ; நல்ல பஸ் போக்குவரத்தும் வேண்டும். ரயில் பாதை வேண்டாமென்று யாரும் சொல்லமாட்டார்கள்.

Mr. SPEAKER: Next question.

Some hon. Members rose . . . . .

Mr. SPEAKER: How can I allow further supplementaries ? I have already allowed ten supplementary questions on the question.

Sri S. M. ANNAMALAI: One question, Sir.

Mr. SPEAKER : No, I am sorry.

*Tirunelveli-Cape Comorin Railway line*

*795 Q.—Sri A. A. RASHEED: Will the Hon. the Minister for Home be pleased to state the steps taken to include the opening of a new railway line from Tirunelveli to Cape Comorin (via) Nagercoil, in the Third Five-Year Plan ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: The Tirunelveli-Cape Comorin line has been included as item 4 in the list of seven lines suggested to the Railway Administration for inclusion in the Third Five-Year Plan.

Sri A. A. RASHEED: Is the Hon. Minister aware that no mention has been made about this line by the Railway Ministry and if so, may I know whether any protest has been made to the Railway Ministry against their failure to include this line ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: Sir, there is no question of making any protest. We have recommended these lines. It is for the Railway Ministry to consider them and take up those lines. That would depend on the funds that are available with them for the purpose.

Sri A. A. RASHEED: May I know which seven lines have been recommended by the Government ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: Six lines have been recommended. The first line is Salem-Bangalore. I am sure hon. Member Sri Thiagarajan will be pleased to hear that we have given second priority to the Theni-Gudalur line. The third line recommended by us is Manamadurai-Virudhunagar (via) Aruppukkottai. The fourth line is Chinnasalem-Chingleput. After consultation with Railway Administration, I have suggested the fifth line, Salem-Karur. This is a new line recommended by us as we thought that it was necessary. Sir, the sixth line is Tirunelveli-Cape Comorin. As the seventh item we have recommended the electrification of the broad gauge line up to Arkonam.